25th March 1961]



பஞ்சப்படி சரியாகக் கொடுக்கப்படவில்லை. எந்தவிதமான நன்மையும் செய்யாமல் இருந்திருக்கிறது. இப்படி ஒரு கஷ்டமான நிலைமை ஏற்பட்டதற்குக் காரணம் என்ன?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: நகரசுத்தித் தொழிலாளர்களுக்கு பஞ்சப்படி கொடுக்கப்படவில்லை, எந்தவித மான நன்மையும் செய்யப்படவில்லை என்பது சரியல்ல. முனிஸி பாலிட்டியாக மாற்றவேண்டும் என்றதற்கு அங்குள்ளவர்கள் சம்மதிக்கவில்லை. பழையபடி பஞ்சாயத்தாகவே மாற்றப்பட்டிருக் கிறது.

*Erection of statues by municipalities*

* 903 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) நகராட்சி மன்றங்களில் சர்க்கார் அனுமதியில்லாமல் சிலைகள் வைக்கக்கூடாது என்று உத்தரவு பிறப்பித்துள்ளார்களா?

(இ) அப்படியாயின், காரணங்கள் யாவை?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (அ) Yes, Sir.

(இ) Any expenditure incurred on the purchase and erection of statues or busts by local bodies is not an authorized item of expenditure under the Madras District Municipalities Act. Sanction of the Government is necessary for incurring such expenditure. Local Bodies, in some cases, come up to Government for post-approval of the expenditure. It was, therefore, considered desirable to issue general instructions forbidding local authorities from entering into any commitment in respect of purchase and erection of statues without obtaining the prior specific sanction of Government.

SRI S. M. ANNAMALAI: சில சிலைகளை மட்டும் வைக்கலா மென்று சர்க்கார் உத்தரவு போட்டிருக்கிறார்களா? சில சிலைகள் என்றால் எந்த எந்தச் சிலைகளை வைக்கலாம்?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: எந்த விதமான சிலைகளை வைக்கவேண்டுமென்று தனியாக உத்தரவு போடவில்லை.

SRI A. A. RASHEED: May I know whether the Government have sanctioned any amount for the erection of statues recently for any of the municipalities in our State?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: Let the hon. Member put a separate question.

SRI A. VEDARATHNAM: நீல் சிலை போன்ற தேசத் துரோகி களின் சிலைகள் அப்புறப்படுத்தப்படுமா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: சிலைகளை வைக்கக்கூடிய கேள்வி இது. அப்புறப்படுத்தக்கூடிய கேள்வி அல்ல.

[25th March 1961

SRI V. K. KOTHANDARAMAN: சிலைகள் மாத்திரம் அல்ல, படங்களும் கூட வைக்கவேண்டுமென்றால் முதலில் ஐ.எல்.பி.-க்கு எழுதி, லா டிபார்ட்டுமெண்டுக்குப் போய், பிறகு மந்திரிகளும் பார்த்து உத்தரவு கொடுத்தால்தான் வைக்கலாம், இல்லாவிட்டால் முடியாது என்ற அளவுக்கு ஏதாவது தனி உத்தரவு இருக்கிறதா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் விருப்பப்படி சிலைகளையோ, படங்களையோ வைக்கக்கூடாது என்பதுதான் நோக்கம்.

SRI S. M. ANNAMALAI: சிலைகளை வைக்கவேண்டுமென்றால் சர்க்கார் பணம் கொடுக்க வேண்டிய நிலைமை இருக்கிறது. அதனால் இப்படிப் பரிசீலிப்பதாகச் சொன்னார்கள். அந்த அந்த முனிசிபாலிடிகளே, நகரசபைகளே பணச்செலவை ஏற்றுக்கொள்ளும் போது சர்க்கார் எவ்விதத் தடங்கலுமின்றி அனுமதி வழங்குவார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: சிலைகளை வைத்த பிறகு அரசாங்க உதவி கேட்டு எழுதியிருக்கிறார்கள். பொதுவாக அவரவர்களுடைய விருப்பத்திற்கு சிலைகளை வைப்பது, படங்களை வைப்பது கூடாது என்பதற்குத்தான் இவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ: தகுதியற்றவர்கள் சிலைகளையோ, படங்களையோ வைப்பதற்கு முயற்சிக்கிறார்கள் என்ற புகார்கள் இப்போது இல்லை.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: அவ்விதமான புகார்கள் இப்போது இல்லை.

*Fish Farm (Otteri Lake)*

*931 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் நகரசபை பராமரிப்பில் உள்ள ஓட்டேரியில் மீன் வளர்க்கப்படுகிறதா ?

(இ) அந்த ஏரியின் அருகில், மீன் வளர்ப்புப் பண்ணை அமைத்து அபிவிருத்தி செய்ய உத்தேசம் உண்டா ?

THE HON. SRIMATHI LOURDAMMAL SIMON: (அ) & (இ) No, Sir.

SRI S. M. ANNAMALAI: ஓட்டேரியில் எப்போதும் தண்ணீர் இருப்பது வழக்கம். அப்படித் தண்ணீர் இருக்கிற ஏரியில் மீன் வளர்க்க ஏன் பண்ணை ஆரம்பிக்கக் கூடாது ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: ஓட்டேரியில் உள்ள தண்ணீரில் ஐந்து நாட்களுக்குத்தான் மீன் பிடிக்க வசதி யுள்ளது. அதுவும் அந்த ஏரி மீன் பிடிக்கும் ஏரியாக இருக்கத் தகுதி இல்லாதது என்ற காரணத்தால் அங்கே மீன் பண்ணை ஆரம்பிக்கவில்லை.